# இயலிசை

தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10/-
அரையாண்டு சந்தா ரூ. 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
K. P. இளங்கோவன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 1 15-2-83 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை இதழ் 19/20


## தமிழ்நாடு ஓதுவா மூர்த்திகள் மாநில மாநாடு

### அறநிலைய அமைச்சர் வாழ்த்துரை

தமிழ் நாடு தேவார ஓதுவார் மூர்த்திகள் சங்க 4-வது மாநில மாநாடு ஜனவரி 30, 31 தேதிகளில் சென்னை மாம்பலம் சிவா விஷ்ணு திருக்கோயிலிலும் சைதாப்பேட்டை காரணீஸ்வரர் திருக்கோயிலிலும் நடைபெற்றது. தமிழ் நாட்டின் பல ஊர்களிலிருந்து ஓதுவார் மூர்த்திகள் வந்து கலந்து கொண்டனர். இரண்டு நாட்களிலும் ஓதுவார் மூர்த்திகளின் தொடர் இசையரங்கம் நடைபெற்றது. செல்வி ஸ்ரீ கலாவின் தேவார பரத நாட்டியமும் நடைபெற்றது. விழா முதல் நாளில் அறநிலைய அமைச்சர் வாழ்த்துரை வழங்கி ஓதுவார் மூர்த்திகள் தங்கள் குறைகளை முறையாக தெரிவித்தால் அரசு ஆவன செய்யும் என்றார். தஞ்சை பல்கலைக்கழக பேராசிரியர் க. வெள்ளைவாரணனார், சிதம்பரம் ஓதுவார் மு. கனகசபை பிள்ளை, நடிகர் S. V. சகஸ்ரநாமம் ஆகியோருக்கு சங்கசார்பில் அமைச்சர் இராமவீரப்பன் பொன்னாடை போர்த்தி பட்டங்கள் வழங்கினர்.

நீதிபதி திரு. மோகன், ஆசிரியர் N. R. முருகவேள், இயலிசை நாடக மன்ற செயலர் D. V. நாராயணசாமி, உடுமலைப்பேட்டை தி. க. செந்தில் ஆறுமுகம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்கள் மறுநாள் சைதையில் நடைபெற்ற கூட்டத்தில் மயிலை கபாலீஸ்வரர் திருக்கோயில் அறங்காவலர் திரு. T. குப்புசாமி முதலியார் அவர்களுக்கும் சங்கத்திற்கு நன்கொடை வழங்கிய திரு. மூ. பூமகள்நாதன் அவர்களுக்கும் பாராட்டு விழா நடத்தினர். கயப்பாக்கம் முத்துலிங்க ரெட்டியார், பாரதி கலைக் கழகத்தலைவர், இரா. சுராஜ், தினமணி உதவியாசிரியர் சே. இராமனுஜாச்சாரியார் உரை ஆற்றினர். மாநாட்டில் கலந்து கொண்ட ஓதுவார் மூர்த்திகளுக்கு எல்பீல்ட் இந்தியா நிறுவனத்தை சார்ந்த திரு. S. விஸ்வநாதன் புத்தாடை வழங்கினார். திரு. சோமசுந்தர நாடார் T பாலசுந்தர முதலியார் ஆகியோர் கூட்டங்களுக்கு தலைமை வகித்தனர். சிறப்பாக நடைப்பெற்ற மாநாடு ஏற்பாடுகளை தேவாரம் கலைமாமணி, சைதை நடராஜன், சங்கத் தலைவர் மற்றும் சங்க நிர்வாகிகள் செய்திருந்தனர்.

## தைப்பூச விழாக்கள்

தமிழகமெங்கும் தைப்பூசத்தை யொட்டி ஜனவரி 27, 28 தேதிகளில் கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றன. வடலூரில் இரண்டு நாட்கள் அருட்பா இசையரங்கத்தில் மாயூரம் ராமசாமி, மாயூர் S. சதாசிவம், T. N. சரஸ்வதி மற்றும் பலர் கலந்து கொண்டனர். நாகப்பட்டினம் குமரக் கோவிலில் மன்னை B. குமாரி, மகனை S. பாலசுப்பரமணியம் பிடில் நாகை N. G. முருகையன் மிருதங்கம், ஆரூர் R. நாகராஜன் கடம் இவற்றுடன் பாடினர். எண்கண் சுப்பரமணியசுவாமி திருக்கோயில் தஞ்சை சகோதரிகள் S. கிரிஜா மைதிலி குழுவினர் இன்னிசை நடைபெற்றது மன்னார்குடி ஸ்ரீராமலிங்கசுவாமி மடத்தில் வேலூர் K. குணபூசணம் இசைச் சொற்பொழிவு நடைப் பெற்றது. திருவாரூர் பழனியாண்டவர் கோயிலில் கீரனூர் குரு ராமலிங்கம், குமாரி G. வான்மதி குழுவினர் இன்னிசை நடைபெற்றது. சென்னை கந்தக் கோட்டத்தில் வள்ளலார் பேரவை சார்பில் சிதம்பரம் S. மீனாட்சி சுந்தரம் அருட்பா இசை வழங்கினர்.

சென்னையை அடுத்த பம்மல் என்ற ஊரில் 25-1-83 அன்று அருள்மிகு நாகவல்லி அம்மன் ஆலய குடமுழுக்கு விழாவில் தேரழுந்தூர் சகோதரிகள் மதுரம்–கமலா கச்சேரி நடைபெற்றது.

### தியாக ப்ரம்ம உற்சவம்

திருவையாறில் இவ்வருட தியாகராஜர் ஆராதனை இசை விழா 28-1-83 முதல் 2-2-83 வரை நடைபெற்றது. ஏராள கலைஞர்கள் கலந்து பாடினர். அடுதத ஆண்டு ஆராதனை இசை விழாவிற்கு தலைவர் திரு. ஜி. கருப்பையா மூப்பனார், செயலர்கள் வயலின் குன்னக்குடி வைத்யநாதன், தவில் அரித்துவார மங்கலம் பழநிவேலு ஆகியோரை தேர்ந்தெடுத்துள்ளனர்.

சென்னை மயிலையில் ஸ்ரீதியாகராஜ ஸங்கீத வித்வத் சமாஜம் 136வது ஆராதனை உற்சவத்தை 1-2-73 முதல் 10-2-83 வரை நடத்தி பல கலைஞர்களின் நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்திருந்தது. இங்கு 12-2-83 அன்று புரந்தரதாசர் தினம் கொண்டாடப்பட்டது.

## தலைநகர் கலை விழாக்கள்

(சென்ற இதழ் தொடர்ச்சி)

தமிழிசைச் சங்க இசை விழாவில் காலையில் நடைபெற்ற பண்ணாராய்ச்சி கூட்டங்கள் விறுவிறுப்பாக இருந்தன. தமிழிசைக்கு தேவையான நல்ல கருத்துக்களும் தேவையற்ற கருத்துக்களும் சொல்லப்பட்டன. ஒரேநாளில் நிறைய கட்டுரைகள் வைப்பதனை குறைக்கலாம். அல்லது ஆராய்ச்சி நாட்களை கூட்டலாம்.

இந்தியன் பைன் ஆர்ட்ஸ் கொண்டாடிய 50வது ஆண்டு தங்க விழா தியாகராயநகர், சுவாமிசங்கரதாஸ் கலையரங்கில் 17-12-82 முதல் 2-1-83 வரை நடைப்பெற்றது. தமிழக ஆளுநர் S. L. குரானா துவக்கி வைத்து வீணை S பாலசந்தருக்கு "கலா சிகாமணி" பட்டம் வழங்கினார். இசைவிழாவில் அதிக நிகழ்ச்சிகள் நடத்தியவர்கள் இவர்களே பல இளம் கலைஞர்கள் மற்றும் தமிழக முன்னணிக் கலைஞர்கள் அனைவரும் நிகழ்ச்சியில் பங்கு பெற்றனர். முன்நேர கச்சேரியில் மாண்டலின் கருவியில் கர்நாடக இசை வாசித்த சிறுவன் சீனிவாசன் பல வித்வான்களையும் கவர்ந்தான். தினசரி காலையில் கருத்தரங்கம். ஒரு தலைப்பில் ஒரு கலைஞருக்கு வாய்ப்பு எனவே விரிவாக அவர்களது விளக்கங்களை நல்ல முறையில் சொல்ல வசதியாக இருந்தது. இசைவிழா நடுவில் நாடகங்கள் எதற்கு?

மைலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் கிளப் இசை விழா மயிலையில் 20-12-82 முதல் 1-1-83 வரை நடைப் பெற்றது அமைச்சர் நாவலர் நெடுஞ்செழியன் துவக்கி வைத்து நீண்ட உரையாற்றினார், பாலக்காடு KV நாராயணசாமிக்கு சங்கீத கலாநிபுண என்ற விருதுவழங்கினார். விழாவில் பிரபல கலைஞர்கள் பங்கேற்றனர்.

முத்தமிழ்ப் பேரவை கலை விழா இதர இசைச்சாபைகளில் இசைவிழா முடியும் தருவாயில் 1-1-83 அன்று தொடங்கி 7-1-83 வரை மயிலையில் நடைப்பெற்றது. டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்கள் வழக்கபபடி விழாவினை துவக்கி வைத்து விருதுகளை அள்ளி வழங்கினார். சாண்டில்யன்....இயல் செல்வம் K. N. பக்கிரிசாமிப்பிள்ளை–நாட்டியச் செல்வம், புல்லாங்குழல் N. ரமணி– இசைச் செல்வம். மதுரை N. P. N. சகோதரர்கள் நாதசுர செல்வம், அரித்துவார மங்கலம் பழநிவேல், திருவாளப்புத்தூர் கலியமூர்த்தி–தவில் செல்வங்கள் என விருதுகள் பெற்றனர். இப் பேரவையில் நாதசுர நாட்டிய நிகழ்ச்சிகளுக்கு சிறப்பு கொடுக்கப்பட்டு தினசரி அந்த நிகழ்ச்சிகள் நடைப்பெற்றன. முதல நாள் ஆரம்பத்தில் நாதசுரம் வாசித்த திருப்புலிவனம் சிறுவர்களுக்கு நல்லஎதிர்காலம் உண்டு. மற்ற இசைச்சபையில் கலந்து கொள்ளாத பலர் இதில் பாடினர். நள்ளிரவு வரை நிகழ்ச்சிகள் நடந்தாலும் நல்ல கூட்டம். டாக்டர் கலைஞர் அவர்களே வந்திருந்து கலைஞர்களையும் ரசிகர்களையும் உற்சாகபடுத்தினார். இவர்கள் முன்நேர கச்சேரிகள் தினமும் நடத்தி பல இளம் கலைஞர்களுக்கு ஊக்கம் தர வேண்டும். இவர்கள் கலை விழாவிற்கு விளம்பரம் போதவில்லை.

இசை விழாவில் பல சபைகளில் நடனமாடி சிறப்பித்தவர் செல்வி ஸ்ரீநிதி ரங்கராசன் இவர் தந்தை சென்னை டாக்டர் ரங்கராசன் ஆசிரியர் S. K. இராசரத்தினம் பிள்ளை.

இங்கும் ஒரு நாள் காலை மட்டும் 'வித்வத் சபை' என்று இசை ஆராய்ச்சி கூட்டம் ஒன்று நடத்தினர். இசைக் கல்லூரி மாணவர்கள் கலந்து தங்கள் திறமைகளை காட்டினர். வித்வத்சபை என்றசொல்லுக்கு பதிலாக நல்ல தமிழ் வார்த்தை முத்தமிழ்ப் பேரவையினருக்கு கிடைக்கவில்லையா?

இந்த பருவத்தில் தியாகராய நகரில் ஸ்ரீ கிருஷ்ணகான சபையார் நாட்டிய கலா மாநாடு நடத்தி குச்சிப்புடி கலைஞர் குமாரி சோபா நாயுடுக்கு "நிருத்ய சூடாமணி" விருது வழங்கினர். மறைந்த மிருதங்க மேதைகள் புதுக்கோட்டை மாமுண்டி பிள்ளை, பழனி முத்தையாபிள்ளை, புதுக்கோட்டை தட்சிணாமூர்த்தி பிள்ளை, பழனி சுப்ரமணியப்பிள்ளை இவர்கள் படங்களையும் செம்மங்குடி சீனிவாச ஐயர் அவர்களால் திறக்க வைததனர்.

வழுவூரார் பரத நாட்டிய ஆர்ட் சென்டர் மயிலை R. R. சபையில் நடன விழாவினை ஒன்பது நாட்கள் நடத்தி நல்ல நடன நிகழ்ச்சிகளை அளித்தனர்.

(தொடர்ச்சி 4-ம் பக்கம்)

கலைத் தொடர் கதை

# ஆடலரசி அபிராமி

## 3. யாரோ இவர் யாரே?

பெரிய மனிதர்களையும், கலைஞர்களையும் பார்க்க வேண்டுமென்றால் அவர்களுக்கு தெரிந்தவர்களோடு சென்றால் தான் நல்ல முறையில் வரவேற்பு பெற்று பேசலாம். இது எக்காலத்திற்கும் பொருந்தும். பழங்கலைஞர் பஞ்சாட்சரதனுடன் சென்றால் கலைஞர்களை எளிதில் பார்த்து பழகிக் கொள்ளலாம் என்ற எண்ணத்துடன் சுப்புணி அவருடன் சென்று கொண்டிருந்தான்.

"அபிராம சுந்தரி ஜாகைக்கு தானே இளையராஜா போகின்றீர் அவங்க வந்திருப்பாங்களா என்று கேட்டான் சுப்புணி.

சங்கீத வித்வான் முதல் சுரத்தை சுத்தமாகப் பிடிக்கும் பொழுதே இதுதான் ராகமாக இருக்குமென்று அறிந்து கொள்வான் ஞானஸ்தன். சுப்புணியின் ஆவல் அறிந்த பாகவதர்.

"வந்திருக்கணும்...... நானும் ராசவீதி பக்கம் தான் போகின்றேன், வாருமே" என்றார்.

பெரிய வீதிகளுக்கு ராசவீதி என்பார்கள் அந்த வீதிகளில் பெருங் கட்டிடங்கள், மாளிகைகள், சத்திரங்கள் இருக்கும் இவற்றில் தான் அக்காலத்தில் நிகழ்ச்சிகளுக்கு வரும் கலைஞர்களுக்கு தங்க வசதிகள் செய்து கொடுப்பார்கள். 'லாட்ஜ்' அப்பொழுது கிடையாது தஞ்சை தர்கள், பண்ணைகள் ஊருக்கு ஊர் ஒரு மாளிகை வாங்கி வைத்திருப்பார்கள் தாங்களோ வேண்டியவர்களோ வரும் பொழுது பயன்படுத்திக் கொள்வார்கள்.

பஞ்சாட்சர பாகவதர் ராசவீதியில் சற்று தூரம் சென்று சங்கீத கோஷ்டி ஆட்கள் யாராவது கண்ணில் படுகின்றார்களா, அவர்களைக் கேட்டால் கலைஞர்கள் எங்கெங்கு தங்கியிருப்பார்கள் என்ற விபரம் தெரியும் என்று பார்த்தார் அப்பொழுது அவர் எதிரில் கம்பீரமான அழகும் கூடிய இளைஞன் ஒருவன் வந்து வணக்கம் தெரிவித்து நின்றான். ஜரிகைக்கரை பட்டு வேட்டி, சில்க் ஜிப்பா, கழுத்தில் தாம்புகயிறு செயின், விரல்களில் மோதிரம், பாகவதர் கிராப், நெற்றியில் சந்தன குங்கும ஜவ்வாது பொட்டுகள், அத்தர் வாடை அனைத்தும் அவன் மேல் இருந்தது

பாகவதர் திருப்பி வணக்கம் தெரிவித்து "தம்பி சௌக்யமா பாப்பா சௌக்கியமா? என்று கேட்டார்.

"எல்லாம் சௌக்கியம் தான் பாகவதரே! நேற்று கச்சேரிக்கு வந்தோம் இதே வீதியில் கடைசியில் உள்ள சத்திரத்தில் தான் ஜாகை உங்களைப் பார்த்தா கையோடு அழைச்சி வரணும் என்று பாப்பா சொல்லியிருக்கு நீங்க அவசியம் வரணும்"

"அதுக் கென்ன தம்பி பாப்பாவை பார்த்து ரொம்ப நாளாச்சு. வர்ரேன்னு சொல்லு என்ற பாகவதர் சுப்புணியைக் காட்டி "இவரை அபிராமி ஜாகையிலே விட்டுட்டு வந்திடறேன், அவங்க கோஷ்டி எங்கே இருக்குன்னு தம்பிக்கு தெரியுமா" என்று கேட்டார்.

அபிராமி என்றதும் அவன் முகத்தில் ஆயிரம் உணர்ச்சிகள் தோன்றி மறைந்தன "உம்...... அவ்வளவு சீக்கிரத்தில் வந்துடுவாளா குத்தாலத்தில் அலங்காரம் ஆரம்பிச்சவாசி கும்பகோணத்தில் தான் முடிப்பா. ஊர்வசி, ரம்பை தன்னைப் பார்த்துதான் அலங்காரம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம். போதா குறைக்கு புதுக்கோட்டை இளையராஜா செல்வாக்கு தேற்று பிறந்தவளுக்கு இவ்வளவு கர்வம் கூடாது" என்றான்.

இதற்கு மேல் பாகவதர் அவனிடம் ஒன்றும் கேட்கவில்லை. வருகின்றேன் என்று சொல்லி விட்டு நகர்ந்தார். சுப்புணி இதுவரை வாயைத் திறக்கவில்லை. அவன் மனதில் இந்த இளைஞன் யாராக இருப்பான கச்சேரிக்கு வந்தேன் என்கின்றானே பெரிய கலைஞன் அல்லது பெரிய இடத்து பையனாக இருப்பான் என்று பலவாறு குழம்பிகொண்டிருந்தான் அவனைத் தனக்கு பாகவதர் அறிமுகம் செய்து வைக்காத குறைவேறு அவன் சென்றதும் பாகவதரிடம் "தம்பி யாருங்க? பெரிய வித்வான் போல இருக்கின்றாரே" என்று கேட்டான்.

பாகவதர் சிரித்து விட்டு சுற்றும் முற்றும் பார்த்து விட்டு, "இவனுக்கு ஒரே வரி விலாசம் தான். குத்தாலம் பாப்பாவோட ஏக புதல்வன் இது தவிர வேறு எந்த யோக்யதையும் கிடையாது" என்றார்.

"என்ன பாகவதரே ஆளைப் பார்த்தால் மகாராஜா மாதிரி இருக்கின்றானே......" என்று இழுத்தான் சுப்புணி.

"ஆமாம் அவன் பெயர் கூட மகாராசன் தான் பெயரோடு சரி ஆத்தா சம்பாத்யத்தில் அழகா சாப்பிட்டுக் கொண்டிருக்கின்றான் அவளும் இவனைப் படிக்க வைத்தா பள்ளிக்கூடத்தில் இவன் இருந்தா மற்ற பையன்கள் கெட்டு விடுவார்கள் என்று வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள், நல்ல வாதயாரை வைத்து சங்கீதம் சொல்லி கொடுத்தா அவருக்கு ஞானமில்லை என்று பேசி துரத்தி விட்டான். அம்மா ஏமாந்தால் பணத்துடன் தலைமறை வாகி விடுவான். மைனர்கள் சகவாசம் சகலவித கெட்ட பழக்கம் உண்டு. பணம் கரைந்ததும் வந்து சேருவான் உடனே அம்மாவும் பிள்ளையும் கட்டி பிடித்துக்கொண்டு அழுவார்கள். இருந்தாலும் இவனுக்கு எந்த வித மரியாதைக் குறைய கூடாது அதனை பாப்பாவால் தாங்கிக் கொள்ள முடியாது. இதற்காக வீட்டுக்கு வருபவர்கள் இவனுக்கு ஏக மரியாதைக் கொடுப்பார்கள் பாப்பா இவனை "தம்பி வாங்க, தம்பி போங்க" அப்படித்தான் பேசும் இவனும் அம்மாவை பாப்பா வந்தது, போனது என்றுதான் பேசுவான். பல பேருக்கு இவங்க உறவு தெரியாது அக்கா, தம்பின்னு எண்ணுவாங்க. இவனுக்குக் கல்யாணம் செய்து வைத்தால் திருந்திடுவான் என்று பாப்பா பெண பார்த்தா இந்த ஜில்லாவிலே யாரும் கொடுக்க முன்வரல வேறு ஜில்லாவில் பார்க்க சொல்லு இதற்கு பயந்தே நான் அந்தப் பக்கம் போறதில்லை" என்றார்.

சுப்புணிக்கு இது வெல்லாம் காதில் விழவில்லை, அவன் அபிராமியை கர்வம் பிடித்தவள் என்று சொன்னதைக் கேட்க பிடிக்க வில்லை பாகவதரிடம் "அபிராம சுந்தரியைப் பற்றி இவன் சொல்வது உண்மையா' என்று கேட்டான்.

பாகவதர் சற்று ஆச்சரியமடைந்தவராய், "ஏனய்யா சுப்புணி அபிராமியை இன்னும் நீர் பார்க்கவேயில்லை. அதற்குள் பரம ரசிகனாயிட்டே எவனோ குறைத்து பேசினால் கோபம் வருகின்றது" என்று சுப்புணியை கேலி செய்துவிட்டு தொடர்ந்தார்.

"அபிராமி ஆட ஆரம்பித்ததும் குத்தாலம் பாப்பாவுக்கு மவுசு குறைய ஆரம்பித்து விட்டது இத்தனைக்கும் இவர்கள் தூரத்து உறவுகாரர்கள் தான் இருந்தாலும் அபிராமி இவனையெல்லாம் மதிப்பதோ, ஏரெடுத்து பார்ப்பதோ கிடையாது. அந்த கோபத்தில் பேசுறான். அவன் பேசுவதிலும் ஓரளவு உண்மை உண்டு அழகான பெண்ணுக்கே கர்வம் கூட பிறந்தது வித்தை வேறு கூடி விட்டது, புகழும் கிடைத்துவிட்டது. மக்களும் மன்னர்களும் அவள் தரிசனத்திற்கே காத்து நிற்கின்றனர். கெவர்னர் துரைகளும் இவள் ஆட்டத்திற்கு வர்ராங்க. அவள் கடைக்கண பார்வையிலே சொர்க்கம் இருப்பதாக நினைத்து சொர்ணத்தைக் கொட்ட பல பிரபுக்கள் தயாராக இருக்கின்றனர். அலங்கார பிரியை. இவளது புதுபுது அலங்காரத்தைப் பார்த்து அரண்மனைப் பெண்களும் அவ்வாறு செய்து கொள்வார்கள் என்று கேள்வி" என்றார். பாகவதர் பதிலில் சமாதானமானான் சுப்புணி.

இப்பொழுது சினிமாவைப் பார்த்து பெண்கள் அலங்கார நாகரீக மாற்றங்கள் செய்து கொள்வது போல் அப்பொழுது நடனமாதுக்களைக் கண்டுதான் அலங்காரங்கள் செய்து கொள்வர். அதனால்தான் இன்றும் சில ஆண்கள் பெண்கள் அலங்காரம் அதிகம் செய்து கொண்டால் "என்ன........... மாதிரி அலங்காரம் செய்து கொண்டிருக்க" என்று வேடிக்கையாகக் கேட்கும் பழக்கம் தெற்கே உண்டு.

இளையராசாவுக்கு சொந்தமான மாளிகை ஒன்று கும்பகோணத்தில் இருந்தது அங்கு தான் அபிராமி குழுவினர் வந்து தங்குவார்கள் என்று எண்ணிய பாகவதர் சுப்புணியுடன் அந்த மாளிகைக்குசென்றார் மாளிகை வாசலில் இளையராசா வந்த சாரட் வண்டி நின்று கொண்டிருந்தது. அபிராமி வருகிறாள் என்றால் பல பெரிய மனிதர்களும் வந்திருப்பார்கள், அவர்களையும் இளையராசாவையும் அபிராமியையும் அவளது குழுவினரையும் பார்த்து விடலாம் என்ற எண்ணத்தில் பாகவதர் மாளிகைக்குள் சென்றார் தவிர பந்தனைநல்லூர் பங்கஜம் பாகவதரிடம் மிகவும் மதிப்பு வைத்திருப்பவள் அவர்களைப் பற்றியும் விசாரிக்க ஆவல்.

மாளிகை முன் கூடத்தில் அபிராமி நடன குழுவினர் வந்திருந்தனர் அவர்களுடன் வந்திருந்த பிரமுகர்கள் பேசிக் கொண்டிருந்தனர். பாகவதர் வந்ததும் பலரும் எழுந்து நின்று வணக்கம் தெரிவித்தனர், அபிராமி இன்னும் வந்து சேரவில்லையென்று தெரிவித்தனர். உள்ளே சென்று இளையராசா உதவியாளரை பாகவதர் பார்த்து இளையராசாவைச்சந்திக்கலாமா என்று கேட்டார். அதற்கு அவர் "இளையராசா இப்பொழுது யாரையும் பார்க்க மாட்டார் ஓய்வெடுத்துக் கொண்டு இருக்கின்றார்" என்று சொன்னார் அபிராமி தனக்கு முன்னே வராமல், தன்னைக் காக்க வைத்திருக்கின்றாளே என்ற கோபத்தில் இளையராசா இருக்கின்றார் என்பதனைப் புரிந்து கொண்ட பாகவதர் திரும்ப கூடத்திற்கு வந்து அங்கிருந்தவர்களோடு கலந்து கொண்டார்.

(தொடரும்)



# மருத்துவ கல்லூரி மாணவியின் மணியான நாட்டியம் !



சென்னையில் நடைபெற்ற முத்தமிழ்ப் பேரவை கலை விழாவில் இரண்டாவது நாளன்று பரத நாட்டியம் ஆடிய ஸ்டான்லி மருத்துவ கல்லூரி மாணவி செல்வி S. கனிமொழி எடுப்பாக ஆடி எல்லோரையும் கவர்ந்தார். தண்டாயுத பாணி பிள்ளை இயற்றிய பைரவி வர்ணத்தில் தனது பரத திறமையையும் குன்று தோராடி, கருணை பொழிகின்ற என்ற பதங்களிலே தனது பாவத்திறமையையும் நன்கு காட்டினார். இவரது ஆசிரியை மாலதி ஸ்ரீனிவாசன் தந்தை திரு சாத்தப்பன். நாட்டியத்தில் மட்டுமின்றி படிப்பிலும் குமாரி கனிமொழி வல்லவர். ஏராள பரிசுகள் வாங்கியுள்ளார் அவருக்கு இயலிசை வாழ்த்துக்கள்.

## திரைப்பட விமர்சனம்

### ஆகாய கங்கை

சுவரொட்டிகளிலே சுஹாசினி நாட்டியம் ஆடுவது போலும் கார்த்திக் நட்டுவாங்கம் செய்வது போலும் பெரிதாக விளம்பரம் செய்திருந்ததை கண்டு எங்கள் ஆசிரியர் இது ஒரு பரதக் கலை படமோ என்று கொட்டகைக்கு விரைந்தார். அவரை மரியாதையாக கூப்பிட்டு டிக்கெட் வழங்கினார்கள் படத்தில் ஒரு கனவு காட்சியில் மட்டுமே சுவரொட்டியில் போடப்பட்ட காட்சி வந்தது. மற்றப்படி ஆகாயகங்கை ஒரு தலைராகம் படத்தின் வேறொரு கோண படப்பிடிப்பு சுஹாசினி கார்த்திக் ஜோடி பொருத்தமாக இல்லை. நல்ல வேளை கதையில் அவர்களுக்கு திருமணம் ஆகவில்லை. என்றாலும் கதையை சுபமாக முடித்துள்ளார்கள். இளையராஜாவின் இசை இனிக்கிறது. தியாகு, உஷா இவர்களும் நன்றாக நடித்துள்ளனர்.

### கோழி கூவுது

இசையமைப்பாளர் கங்கை அமரன் கதை, வசனம் எழுதி இயக்கியுள்ள படம் கோழி கூவுது. நகரங்களை விட கிராமங்களில் தான் கோழி சத்தம் அதிகம் கேட்கலாம். படத்துக்கு பிரபு, சிலுக்கு கவர்ச்சி கூட்டுகின்றனர். சுரேஷ், புதுமுகம் விஜி ஜோடி கச்சிதமாக உள்ளது. சின்னபொண்ணுக்கு மார்கெட் வரலாம். இளையராஜாவின் நாட்டுப்புற எளிய இசை மக்களை கவர்கின்றது. சிறு பையன்கள் வாயிலும் இன்றைக்கு "அண்ணே அண்ணே சிப்பாய் அண்ணே" பாட்டு ஒலிக்கின்றதே! இயக்குனர் கங்கை அமரன் தெளிவாக விஷயங்களைச் சொல்லி அழகாக கதையை முடிக்கின்றார். அவருக்கு எமது வாழ்த்துக்கள்.

### தூங்காத கண்ணின்று ஒன்று

பயணங்கள் முடிவதில்லை இயக்குனர் சுந்தரராஜன் இயக்கி K. V. மகாதேவன் இசையமைப்பில் வெளிவந்துள்ள படம். மோகன், அம்பிகா ஜோடி சிறப்பாக செய்துள்ளனர். படத்தின் பல இடங்களில் இயக்குனர் முத்திரை பளிச்சிடுகிறது. K. V. மகாதேவன் இசையமைப்பு நன்றாக உள்ளது எனினும் இந்த படத்திற்கு அவர் இசையமைப்பு தான் கட்டாயம் வேண்டுமா? விறுவிறுப்பாக செல்லும் படத்தின் முடிவை வேறு நல்லவிதமாக முடித்திருந்தால் படத்தின் தரமும், வசூலும் வேறு விதமாக இருக்கலாம்.

## தட்டுங்கள் திறக்கப்படும் (கடிதங்கள்)

சமீபத்தில் மியூசிக் அகடமி இசைவிழாவில் பாடிய சாருமதி ராமசந்திரன் ஒரு புதிய தாளத்தில் பல்லவி பாடினார்கள். இந்த புதிய தாளம் காலஞ்சென்ற என் தந்தையார் இசைப் பேராசிரியர் டி. ஏ. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியார் இயற்றிய 'தாள ஏரி' என்ற நூலில் உள்ளது. பாடகர் தாளத்தின் நூல் பெயரை மட்டும் சொல்லி விட்டு ஏனோ நூல் ஆசிரியர் பெயரை சொல்லவில்லை, எனினும் அவருக்கு எனது வாழ்த்து. தாளஏரி என்கின்ற நூலினை பற்றி அறிய வரும்பின் இசை அன்பர்கள் என்னை தொடர்பு கொள்ள வேண்டுகிறேன்.

இசை T. A. S. தக்கேசி
கொரட்டூர் ரயிலடி சென்னை 80

திருமண கூடங்களில் ஒலி பெருக்கி வைத்து திரைப்பட பாடல்களை ஒலிபரப்புகின்றனர் சில சமயங்களில் அதே நேரத்தில் திருமணத்திற்கு வாசிக்க வந்திருக்கும் நாதசுரகாரரை வாசிக்க வைக்கின்றனர். இதனால் எந்த இசையையும் ஒழுங்காக கேட்க முடியாமல் தலைவலிதான் வருகின்றது தவிர மேளக்காரர்களையும் இது அவமதிப்பது போல் இருக்கின்றது எனவே கல்யாண வீட்டார் இந்த தவறினை செய்தாலும் ஒலி பெருக்கியாளர் கட்டி காட்டி மேளம் வாசிக்கும் வேளையில் தனியே இசைத்தட்டு பாடல்கள் போடுவதை நிறுத்திக் கொள்ள வேண்டும்,

எம். முனியாண்டியா பிள்ளை
துணைத்தலைவர், சென்னை
மாவட்ட இசைவேளாளர்
சங்கம்

## வலங்கைமான் மாசிப் பெரு விழா

### நாதசுர கலைஞர்களுக்கு பட்டமளிப்பு !

தஞ்சை மாவட்டம் வலங்கைமான் அருள் மிகு மகா மாரியம்மன் திருக்கோயிலில் வரும் 7-3-83 அன்று மாசி பெருவிழா நடைபெற உள்ளது. இவ்விழாவில் வருடந்தோறும் கலைநிகழ்ச்சிகள் நடத்தி நாதசுர கலைஞர்களுக்கு பட்டங்களும் அளிக்கின்றனர். இரவு மறைந்த பிரபல நாதசுர தவில் மேதைகளின் பட ஊர்வலம் நடத்துகின்றனர் இவ்வாண்டு விழாக் குழுவினர் வல்லம் வி. ஏ. கிருஷ்ணன், நாதசுரகலைஞர், பெரும் பள்ளம் பீ. பீ. வெங்கடேசன் தவில் கலைஞர் இவர்களுக்கு பட்டமளிக்கின்றனர். இக் குழுவின் தலைவர் பிரபல தவில் மேதை அரசவைக் கலைஞர் வலங்கைமான் ஏ. சண்முகசுந்தரம் செயலாளர் நாதசுர கலைஞர் வலங்கைமான் எஸ். ஏ. சௌந்திரராஜன் விழாவிற்கு நன்கொடை அனுப்புபவர்கள் பொருளாளர் T. T. வேலு தவில் கலைஞர் வலங்கைமான் 612804 என்ற விலாசத்திற்கு அனுப்ப வேண்டுகிறோம்.

TN / MS(S) 260
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thirvnavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai street, Vadapalani Madras 26 Published & Edited by M. Lakshmi 57 South Sivan Koil street, Kodambakkam MADRAS 600 024.



18, புதுப் பிரதான சாலை
இராசா அண்ணாமலைபுரம்
சென்னை 28



'சங்கீத கலா நிபுண'
K V. நாராயணசாமி

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இசைவிழாச் சபைகள் ஏராள பணம் செலவு செய்து விளம்பரங்கள் செய்து நிகழ்ச்சிகள் நடத்தியும், தினசரி, வாரப் பத்திரிகைகள் பல வகைகளில் விளம்பரங்கள் செய்தும் அந்தளவு நிகழ்ச்சிகளுக்கு கூட்டம் இல்லை. சாதாரண மாதாந்திர சபை நிகழ்ச்சிகளுக்கும், கோவில் திருவிழா இசை நிகழ்ச்சிகளுக்கும் அதே கலைஞர்களுக்கு வரும் கூட்டத்தை விட இங்கு குறைவே. இதற்கு ஒரே நேரத்தில் பல இடங்களில் இசை நிகழ்ச்சிகள் நடத்துவது ஒரு காரணம் என்றாலும் கோஷ்டி மனப்பான்மை, ஜாதி உணர்வு இவைகளும் அங்கு இருப்பதை நாம் உணரமுடிகிறது. இதனை பல கலைஞர்கள் வெளிப்படையாகச் சொல்கின்றனர். பத்திரிகைகளும் எழுதுகின்றன. இசைவிழா நடத்தும் இசைச்சபைகள் இவற்றைத் தவிர்க்க பாடுபடுவார்களா?

## கலைஞர்களின் ராசி பலன்

இந்த புது பகுதி இந்த இதழிலிருந்து துவங்கப் படுகின்றது. தனி சோதிடரை வைத்து புது முறையில் 16-2-83 முதல் 15-3-83 வரையிலான மாதத்திற்கு கலைஞர்களுக்கு ராசி பலன் கணிக்கப் பெற்றுள்ளது. பலன்கள் சரியாக உள்ளனவா என அனுபவத்தில் கண்டு கலைஞர்கள் கடிதம் எழுத வேண்டுகிறோம்.

| | | |
|---|---|---|
| மேஷம் | — | பணவரவு |
| ரிஷபம் | — | தொழில் தேக்கம் |
| மிதுனம் | — | வீண் அலைச்சல் |
| கடகம் | — | முன்னேற்ற நேரம் |
| சிம்மம் | — | நல்ல தகவல் |
| கன்னி | — | பிரயாணம் |
| துலாம் | — | நல்ல வாய்புகள் |
| விருச்சிகம் | — | புகழ் வரும் |
| தனுசு | — | தொழில் விருத்தி |
| மகரம் | — | எதிர்ப்புகள் |
| கும்பம் | — | தடைகள் |
| மீனம் | — | செல்வாக்கு வளர்ச்சி |

## நாரதகான சபை வெள்ளி விழா கலையரங்கம் கட்ட ஏற்பாடு

சென்னை மௌபரீசு சாலையில் உள்ள நாரதகான சபை 1958ல் துவக்கப்பட்டது. 200 உறுப்பினர்களுடன் துவக்கப்பட்ட இச்சபையில் இன்று 700 உறுப்பினர்கள் வரை உள்ளனர். இதன வெள்ளி விழாவினை கடந்த 9-2-83 அன்று அமைச்சர் பண்ருட்டி ராமசந்திரன் துவக்கிவைத்தார். வரும் 5-3-83 வரை மியூசிக் அகடமி அரங்கில் இவர்கள் கலை நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர். இந்த 25 நாட்களிலும் கர்நாடக இசை, இந்துஸ்தானி இசை, பல வகை நாட்டியங்கள், நாடக நிகழ்ச்சிகள் நடைபெறும். புகழ்பெற்ற கலைஞர்கள், நாடக குழுவினர்கள் கலந்து கொள்ளுகின்றனர். இந்த வெள்ளிவிழா ஆண்டிலே 40 லட்சம் செலவில் சொந்த கலையரங்கம் கட்டுகின்றனர். இதன் தலைவர் L. சீனிவாசன், துணைத் தலைவர் R. K. பிள்ளை, செயலாளர்கள் R. கிருஷ்ணசாமி K. R. கோபாலன் (AIR FRANCE) இவர்களுக்கு எங்கள் வாழ்த்துக்கள்.

## புரந்தரதாசர் ஆராதனை இசை விழா

கர்நாடக மாநிலத்தில் தோன்றி கர்நாடக இசையை வளர்த்தவர் புரந்தரதாசர் இவரது ஆராதனை உற்சவத்தை புராதன ஹம்பி என்ற ஊரில் பிப்ரவரி 19, 20, 21 தேதிகளில் நடத்த உள்ளனர். திருவையாறில் தியாகராசர் ஆராதனை உற்சவத்தில் பல இசைக் கலைஞர்கள் கலந்து பாடி சிறப்பிப்பது போல ஹம்பியிலும் பல பிரபல இசைக்கலைஞர்கள் கலந்து இசைவிழா நடத்துவர். இது தவிர நடனம், ஒலி ஒளி காட்சிகள் முதலியனவும் நடைபெறும் இதற்கான ஏற்பாடுகளை கர்நாடக அரசின் ஒத்துழைப்போடு புரந்தரதாசர் சேவா சமிதியினர் செய்துள்ளனர். பெங்களூரிலிருந்து சிறப்பு பேருந்துகள் ஹம்பிக்கு விடப்படும்.

## விளம்பர கட்டணம்

| | |
|---|---|
| முழு பக்கம் | ரூ. 300/- |
| அரைப் பக்கம் | ரூ. 150/- |
| கால் பக்கம் | ரூ. 75/- |
| குறைந்தளவு | ரூ. 50/- |

தொடர் விளம்பரங்களுக்கு சலுகை உண்டு.

விற்பனை செய்ய விரும்பும் முகவர்கள் தொடர்புகொள்க.

## 'நாதோபாசனு'

20-2-83 ஞாயிறு மாலை 6 மணிக்கு மயிலை சீனுவாச சாஸ்திரி கூடத்தில்.

| | |
|---|---|
| V. இராமச்சந்திரன் | பாட்டு |
| V. V. ரவி | பிடில் |
| பாலக்காடு ரகு | மிருதங்கம் |



இந்திய அரசின் 'பத்மஸ்ரீ' விருது பெற்ற
## சீர்காழி கோவிந்தராசன்
'பத்மபூஷன்' விருது பெற்ற செங்கல்வராயன் துரைசாமி அய்யங்கார்
இவர்களுக்கு எங்கள் வாழ்த்து !

ECHO

## மகாராஜபுரம் விஸ்வநாதய்யர் இசைச் சுட்டி

### 'எக்கோ' விரைவில் வெளியீடு

திருவாவடுதுறை T. N. ராசரத்னம் பிள்ளை, நாதசுரம், அரியக்குடி இராமானுஜ அய்யங்கார் கச்சேரி இசைச் சுட்டிகளை (காசட்) வெளியிட்ட எக்கோ காஸட்ஸ் கம்பெனி (T R. விசுவநாதன்) தற்பொழுது மறைந்த சங்கீத பூபதி மகாராஜபுரம் விசுவநாதய்யர் அவர்களின் கச்சேரி இசைச் சுட்டியை வெளியிட உள்ளனர்.

ஆந்திரத்தின் நாதசுர தம்பதியர் திரு ஷேக்மெஹபூப் சுபான், திருமதி காசிம்பி பேகம் இவர்கள் தற்பொழுது தமிழகத்திலும் புகழ்பெற்று வருகின்றனர். இவர்கள் தவில் மேதை வலங்கைமான் ஏ. சண்முகசுந்தரம் அவர்களுடன் வாசித்து எக்கோ கம்பெனிக்கு வழங்கியுள்ளனர். இந்த நாதசுர இசைச் சுட்டியும் விரைவில் வெளிவரும்.

## கலைஞர்களே ! ரசிகர்களே !

தாங்கள் இயலிசைக்கு காட்டும் ஆதரவுக்கு நன்றி! இயலிசை தொடர்ந்து வெளிவந்து உங்களுக்கு தொண்டாற்ற உங்கள் ஆதரவு மேலும் தேவை. பல கலைஞர்கள் தாங்களே சந்தா அனுப்பியுள்ளார்கள். அனுப்பாதவர்கள் அனுப்பி ஆதரிக்க வேண்டுகின்றோம். சந்தாவுடன் தங்கள் புகைப்படங்களையும் அனுப்பி வைக்கவும்.

இயலிசை கடல் கடந்தும் ஒலிக்கின்றது. பல இசைப் பேராசிரியர்களும், ஆராய்ச்சியாளர்களும் விரும்பி படிக்கின்றனர். இசைக் கலைக்கான ஒரே தமிழ் இதழ் இதுவே, இதனை இசையுலக அரசியல் எதிலும் ஈடுபடுத்தாமல் 'நடுநிலை' ஏடாக நடத்துவதை நீங்கள் உணரலாம். எனினும் ஏதேனும் குற்றம் குறைகள் கண்டால் உடன் கடிதம் எழுத வேண்டுகிறோம்.

—ஆசிரியர்.

